# ॥ विष्णुपादादिकेशान्तस्तोत्रम् ॥

## விஷ்ணுபாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்

(1)

लक्ष्मीभर्तुर्भुजाग्रे कृतवसति सितं यस्य रूपं विशालं
नीलाद्रेस्तुङ्गशृङ्गस्थितमिव रजनीनाथबिम्बं विभाति ।
पायान्नः पाञ्चजन्यः स दितिसुतकुलत्रासनैः पूरयन्स्वैः-
निध्वानैर्नीरदौघध्वनिपरिभवदैरम्बरं कम्बुराजः ॥

லக்ஷ்மீ பர்த்ருர்புஜாக்ரே க்ருதவஸதி
ஸிதம்யஸ்ய ரூபம்விசாலம்
நீலாத்ரேஸ்துங்க ச்ருங்கஸ்திதமிவ
ரஜநீ நாதபிம்பம்விபாதி।
பாயாந்ந: பாஞ்சஜன்ய: ஸ திதிஸுத
குலத்ராஸநை: பூரயன் ஸ்வை:
நித்வானை: நீரதௌகத்வனி
பரிபவதை ரம்பரம் கம்புராஜ:॥

லக்ஷ்மீநாயகரான நாராயணனின் கையில் விளங்கும் விசாலமான வெண்சங்கு நம்மையெல்லாம் காப்பதாகுக. அந்த சங்கின் பெயர் பாஞ்சஜன்யம். அதன் ஒலி அசுர குலத்தை பயமுறுத்தி நடுங்கச் செய்வது மட்டுமில்லை; மேகங்களின் இடியை விட கம்பீரமானது. ஆகாயம் முழுவதும் அதன் ஒலி பரவியுள்ளது. நீலமலை மீது உதித்து வரும் சந்திரன் போன்று விளங்குவது.

(2)

आहुर्यस्य स्वरूपं क्षणमुखमखिलं सूरयः कालमेतं
ध्वान्तस्यैकान्तमन्तं यदपि च परमं सर्वधाम्नां च धाम ।
चक्रं तच्चक्रपाणेर्दितिजतनुगलद्रक्तधाराक्तधारं
शश्वन्नो विश्ववन्द्यं वितरतु विपुलं शर्म घर्मांशुशोभम् ॥

ஆஹுார்யஸ்யஸ்வரூபம் க்ஷணமுக
மகிலம் ஸுரய: காலமேதம்
த்வாந்தஸ்யை காந்தமந்தம்
யதபிச ப்ரமம் ஸர்வதாம்நாம் ச தாம।

சக்ரம் தச்சக்ரபாணே: திதிஜ
தனுகலத்ரக்த தாராக்ததாரம்
சச்வந்நோ விச்வவந்த்யம் விதரது
விபுலம் சர்ம கர்மாம்சு சோபம்

சக்ரபாணியான விஷ்ணுவின் பார்புகழ் கொண்ட சக்ராயுதம் நமக்கு மிகுந்த மங்கலம் கொடுக்கட்டும். சூரியன் போன்று சுழலும் அச்சக்ராயுதம் காலம் முழுவதையும் ஒரு நொடியாக்கவல்லது என சான்றோர் கூறுவர். இருளின் முழு முடிவு என்று மட்டுமில்லை ஒளிகளுக்கெல்லாம் மேலான ஒளியுடையதுமாகும். அதன் ஆரமுனைகளில் அசுரரின் ரத்தக் கறை படிந்துள்ளதால் அது அவரை அழித்து உலகைக் காத்துள்ளது தெரியவரும்.

(3)

अव्यान्निर्घातघोरो हरिभुजपवनामर्शमाध्मातमूर्ते -
रस्मान्विस्मेरनेत्रत्रिदशनुतिवचः साधुकारैः सुतारः ।
सर्वं संहर्तुमिच्छोररिकुलभुवनं स्फारविस्फारनादः
संयत्कल्पान्तसिन्धौ शरसलिलघटावार्मुचः कार्मुकस्य ॥

அவ்யாத்நிர்காதகோரோ ஹரிபுஜ
பவநாமர்ச மாத்மாத மூர்தே:
அஸ்மான் விஸ்மேர நேத்ரதரிதச
நுதிவச: ஸாது காரை: ஸுதார:
ஸர்வம் ஸம்ஹர்துமிச்சோ: அரிகுலபுவனம்
ஸ்பாரவிஸ்பார நாத:
ஸம்யத் கல்பாந்தஸிந்தெள சரஸலில
கடாவார் முச: கார்முகஸ்ய ॥

பகைவர் கூட்டமாகிய உலகை முழுமையாக அழிக்க விரும்பியதும் ஆகவேதான் அம்புகளாகிய தண்ணீர் பொழியும் மேகமோவெனத் திகழும் வில்லின் பரக்க விரிந்த ஓசை நம்மை காக்கட்டுமே. அம்பின் அடியால் கொடியதாயும், வியப்புற்ற வானவர் ஆமோதிக்கும் பேச்சுகளால் அவ்வோசை மேலும் வலுப்படுகிறது.

(4)

जीमूतश्यामभासा मुहुरपि भगवद्बाहुना मोहयन्ती
युद्धेषूद्धूयमाना झटिति तटिदिवालक्ष्यते यस्य मूर्तिः ।
सोऽसिस्त्रासाकुलाक्षत्रिदशरिपुवपुःशोणितास्वादतृप्तो
नित्यानन्दाय भूयान्मधुमथनमनोनन्दनो नन्दको नः ॥

ஜீமூதச்யாம பாஸாமுஹுரபி பகவத்
பாஹுநா மோஹயந்தீ
யுத்தேஷூத்தூயமாநா ஜடிதி
தடிதிவாலக்ஷ்யதே யஸ்ய மூர்த்தி:।
ஸோऽஸிஸ்த்ராஸாகுலாக்ஷ த்ரிதசரிபுவபு:
சோணிதாஸ்வாத த்ருப்தோ
நித்யாநந்தாய பூயாத் மதுமதன
மனோ நந்தநோ நந்த கோ ந:॥

எந்த வாளின் வடிவம், முகில் வண்ணம் படைத்த விஷ்ணுவின் கையினால் மோஹமுறச் செய்கிறதோ, யுத்த காலத்தில் வீசப்படும்பொழுது மின்னலெனத் தோன்றுகிறதோ, பயந்த அசுரர்களின் உடல் இரத்தம் பருகி திருப்தியடைகிறதோ அத்தகைய நந்தகம் எனப்படும் வாள் நம் நித்யானந்தத்தை தோற்றுவிக்கட்டும். அந்த வாள் கையில் இருப்பதால் விஷ்ணுவுக்கு மகிழ்ச்சியல்லவா!

(5)

कम्राकारा मुरारेः करकमलतलेनानुरागाद्गृहीता
सम्यग्वृत्ता स्थिताग्रे सपदि न सहते दर्शनं या परेषाम् ।
राजन्ती दैत्यजीवासवमदमुदिता लोहितालेपनार्द्रा
कामं दीप्तांशुकान्ता प्रदिशतु दयितेवास्य कौमोदकी नः ॥

கம்ராகாராமுராரே: கரகமலதலேநா
னுராகாத் க்ருஹீதா
ஸம்யக்வ்ருத்தா ஸ்திதாக்ரே ஸபதி
நஸஹதே தர்சனம் யா பரேஷாம்।
ராஜந்தீ தைத்ய ஜீவாஸவமத முதிதா
லோஹிதாலேப நார்த்ரா
காமம் தீப்தாம்சுகாந்தா ப்ரதிசது
தயிதேவாஸ்ய கௌமோதகீ ந: ॥

முராரியின் கையில் நேசத்துடன் பற்றியுள்ள கௌமோதகீ என்ற கதை மனைவியைப் போல் விரும்பியதை நமக்கு அருள வேண்டுமே. அது பெருமான் கையில் கீழ்முகமாக இருந்து நுனியில் உருட்டையாகவும் உள்ளது. பகைவரது காட்சியை ஏற்காமல் விளங்குமிது அசுர உயிராகிய மது அருந்தி மகிழ்ச்சி கண்டு பிரகாசிப்பது (மனைவியான லக்ஷ்மிக்கும் பொருந்தும்).

(6)

यो विश्वप्राणभूतस्तनुरपि च हरेर्यानकेतुस्वरूपो
यं संचिन्त्यैव सद्यः स्वयमुरगवधूवर्गगर्भाः पतन्ति ।
चञ्चच्चण्डोरुतुण्डत्रुटितफणिवसारक्तपङ्काङ्कितास्यं
वन्दे छन्दोमयं तं खगपतिममलस्वर्णवर्णं सुपर्णम् ॥

யோவிச்வ ப்ராண பூத ஸ்தனுரபிச
ஹரேர்யான கேதுஸ்வரூப:
யம் ஸம்சிந்த்யைவ ஸத்ய: ஸ்வய
முரகவதூவர்ககர்பா: பதந்தி।
சஞ்சத் சண்டோரு துண்டத்ருடித பணிவஸா
ரக்தபங்காங்கிதா ஸ்யம்
வந்தே சந்தோமயம் தம் ககபதிமமலம்
ஸ்வர்ணவர்ணம் ஸுபர்ணம்॥

வேத வடிவான, தங்க நிற மொத்த கருடனை வணங்குகிறேன். அசையும் பயங்கர அலகினால் அவர் கிழித்த நாகங்களின் வஸை ரத்தம் இவை படிந்த முகத்தையுடைவராயுள்ளார். அவர் சிறியவராயினும் உலக மூச்சுக்காற்றாகவும், நாராயணரின் வாஹன மாகவும் உள்ளார். அவரை நினைத்தவுடனேயே நாகங்களின் சிசுக்கள் மடிந்து வீழ்கின்றன.

(7)

विष्णोर्विश्वेश्वरस्य प्रवरशयनकृत्सर्वलोकैकधर्ता
सोऽनन्तः सर्वभूतः पृथुविमलयशाः सर्ववेदैश्च वेद्यः ।
पाता विश्वस्य शश्वत्सकलसुररिपुध्वंसनः पापहन्ता
सर्वज्ञः सर्वसाक्षी सकलविषभयात्पातु भोगीश्वरो नः ॥

விஷ்ணோர்விச்வேச்வரஸ்ய ப்ரவரசயன க்ருத்
ஸ்ரவலோகைகதர்தா
ஸோऽனந்த: ஸர்வபூத: ப்ருது விமலயசா:
ஸர்வவேதைஸ்ச வேத்ய:।
பாதா விச்வஸ்ய சச்வத் ஸகல ஸுரரிபு
த்வம்ஸன: பாபஹந்தா
ஸர்வஜ்ஞ: ஸர்வஸாக்ஷீ ஸகல
விஷபயாத் பாது போகீ ச்வரோந:

அகில உலகையும் தாங்கும் அனந்தநாகன் உலக நாயகனான விஷ்ணுவுக்கு சயனமாகி புகழ்பெற்றவர், வேதம் மூலமே அறியத் தக்கவர். பாபங்களைப் போக்கி, அசுரர்களையும் அழித்து உலகைக் காப்பவர். எல்லாம் அறிந்தவர். எல்லா வற்றையும் கண்டு ஸாக்ஷியாக உள்ளார். அவர் நம்மை எல்லா விஷபயத்திலிருந்தும் காப்பாராக!

(8)

वाग्भूगौर्यादिभेदैर्विदुरिह मुनयो यां यदीयैश्च पुंसां
कारुण्यार्द्रैः कटाक्षैः सकृदपि पतितैः संपदः स्युः समग्राः।
कुन्देन्दुस्वच्छमन्दस्मितमधुरमुखाम्भोरुहां सुन्दराङ्गीं
वन्दे वन्द्यामशेषैरपि मुरभिदुरोमन्दिरामिन्दिरां ताम् ॥

வாக்பூ கௌர்யாதிபேதைர் விதுரிஹ முனயோ யாம்
யதீயைஸ்ச பும்ஸாம்
காருண்யார்த்ரை: கடாக்ஷை: ஸக்ருதபி
பதிதை: ஸம்பத: ஸ்யு: ஸமக்ரா:।
குந்தேந்து ஸ்வச்ச மந்தஸ்மிதமதுர
முகாம்போருஹாம் ஸுந்தராங்கீம்
வந்தே வந்த்யா மசேஷைரபி முரபிதுரோ
மந்திரா மிந்திராம்தாம் ॥

அகில உலகங்களும் வணங்கி நிற்கும் நாராயணனின் திருமார்பை கோயில் கொண்டுள்ள லக்ஷ்மீ தேவியை வணங்கு கிறேன். குந்தமலர், சந்திரன் நிகரான இனிய புன்முறுவல் தவழும் முக மலருடன் அழகியவள் தாயார். அவளது கருணை ததும்பும் கடாக்ஷம் ஒருமுறை கிடைத்தால் எல்லா செல்வங்களும் ஒருவனுக்கு கிடைத்து விடும். முனிவர்கள் அந்த தாயாரை ஸரஸ்வதியாகவும், பூதேவியாகவும், பார்வதீ தேவியாகவும் வர்ணித்துள்ளனர்.

(9)

या सूते सत्वजालं सकलमपि सदा संनिधानेन पुंसो
धत्ते या तत्त्वयोगाच्चरमचरमिदं भूतये भूतजातम् ।
धात्रीं स्थात्रीं जनित्रीं प्रकृतिमविकृतिं विश्वशक्तिं विधात्रीं
विष्णोर्विश्वात्मनस्तां विपुलगुणमयीं प्राणनाथां प्रणौमि ॥

யா ஸூதே ஸத்வ ஜாலம் ஸகலமபி
ஸதா ஸந்நிதாநேந பும்ஸ:

தத்தே யா தத்வ யோகாத் சாமசர
மிதம் பூதயே பூதஜாதம் ।

தாத்ரீம் ஸ்தாத்ரீம் ஜநித்ரீம் ப்ரக்ருதிமவிக்ருதிம்
விச்வசக்திம் விதாத்ரீம்

விஷ்ணோர் விச்வாத்மநஸ்தாம் விபுல
குணமயீம் ப்ராணநாதாம் ப்ரணௌமி ॥

எப்பொழுதும் உடனிருக்கும் புருஷனின் துணைகொண்டு ப்ரக்ருதியாகியதாய் பிராணி வர்க்கம் அனைத்தையும் பிரஸவித்து, சரமும் அசரமுமான அந்த பிராணி வர்க்கத்தை தத்வங்கள் கூடியதால் அதை தாங்கி நிற்கிறாள். தாங்கியும், நிலைபெறச் செய்தும், பின்னும் பின்னும் உண்டாக்கியும், மாறாதே உலக சக்தியை தோற்றுவித்தும் வருகிற விஷ்ணுவின் பிராண நாதையை நமஸ்கரிக்கிறேன்.

(10)

येभ्योऽसूयद्भिरुच्चैः सपदि पदमुरु त्यज्यते दैत्यवर्गै -
र्येभ्यो धर्तुं च मूर्ध्ना स्पृहयति सततं सर्वगीर्वाणवर्गः ।
नित्यं निर्मूलयेयुर्निचिततरममी भक्तिनिध्नात्मनां नः
पद्माक्षस्यङ्घ्रिपद्मद्वयतलनिलयाः पांसवः पापपङ्कम् ॥

யேப்யோஸ்ய்த்ப்ருச்சை: ஸ்பதி
பத முருத்யஜ்யதே தைத்ய வர்கை:
யேப்யோ தர்தும் ச மூர்த்நா ஸ்ப்ருஹயதி
ஸததம் ஸர்வ கீர்வாண வர்க:।

நித்யம் நிர்மூலயேயு: நிசிததரமமீ
பக்தி நிக்நாத்மநாம் ந:
பத்மாக்ஷஸ்யாங்க்ரி பத்மத்வய தல
நிலயா: பாம்ஸவ:பாபபங்கம்॥

எவைகளை வெறுத்து அசுரர்கள் தங்களுக்கு வரும் பெரிய பதவியைக்கூட இழக்கிறார்களோ, ஆனால் அவற்றை தலையால் தாங்கவும் தேவர்கள் ஸததமும் விழைகிறார்களோ அப்படிப்பட்ட தாமரைக் கண்ணனான விஷ்ணுவின் திருவடித் தாமரையிலுள்ள ரேணுக்கள் பக்திமான்களான எங்கள் பாபச் சகதியை முழுதும் போகும்படி செய்யட்டும்.

**(11)**

**रेखा लेखादिवन्द्याश्चरणतलगताश्चक्रमत्स्यादिरूपाः**
**स्निग्धाः सूक्ष्माःसुजाता मृदुलिततरक्षौमसूत्रायमाणाः।**
**दद्युर्नो मङ्गलानि भ्रमरभरजुषा कोमलेनाब्धिजायाः**
**कम्रेणाम्रेड्यमानाः किसलयमृदुना पाणिना चक्रपाणेः ॥**

ரேகா லேகாதிவந்த்யா: சரணதலகதாஸ்சக்ர
மத்ஸ்யாதிரூபா:
ஸ்நிக்தா: ஸூக்ஷ்மா: ஸுஜாதா ம்ருதுலலித
தரக்ஷௌம ஸூத்ரா யமாணா:।
தத்யுர்நோ மங்கலாநி ப்ரமரபரஜுஷா கோமலே
நாப்திஜாயா:
கம்ரேணாம்ரேட்யமாநா: கிஸலயம்ருதுநா
பணிநா சக்ரபாணே:

சக்ரபாணியான விஷ்ணுவின் சரணங்களிலுள்ள கோடுகள் சக்ரம், மத்ஸ்யமென விளங்குமவை மிக மெல்லிய பட்டுத் துணியின் நூல்கள் தானோவென்று மினுமினுப்பாய் இருப்பவை: ஸ்ரீ லக்ஷ்மீ தேவி தனது மிக மெல்லிய துளிர் போன்ற கையினால் அவற்றை வருடுவாளே அந்த கோடுகள் எங்களுக்கு மங்கலம் உண்டாக்கட்டுமே!

**(12)**

यस्मादाक्रामतो द्यां गरुडमणिशिलाकेतुदण्डायमाना –
दाश्च्योतन्ती बभासे सुरसरिदमला वैजयन्तीव कान्ता ।
भूमिष्ठो यस्तथान्यो भुवनगृहबृहत्स्तम्भशोभां दधौ नः
पातामेतौ पयोजोदरललिततलौ पङ्कजाक्षस्य पादौ ॥

யஸ்மா தாக்ராமதோ த்யாம் கருடமணி
சிலாகேதுதண்டாயமாநாத்

ஆஸ்ச்யோதந்தீபபாஸே ஸுரஸரிதமலா
வைஜயந்தீவ காந்தா।

பூமிஷ்டோ யஸ்ததான்யோ புவன க்ருஹ
ப்ருஹத்ஸ்தம்ப சோபாம் ததௌ ந:

பாதாமேதௌ பயோஜோதர லலிததலௌ
பங்கஜாக்ஷஸ்ய பாதௌ ॥

தாமரை புஷ்பத்தின் உட்புறம் போன்று மிகவும் மிருதுவான திருவடிகள் எங்களைக் காப்பதாக! அவற்றிலொன்று முன்பு (த்ரிவிக்ரமாவதார காலத்தில்) பச்சை மரகத மணிக்கொடித் தம்பம்போல் ஆகாயத்தில் பரவியதே அதிலிருந்து ஆகாசகங்கை பிரவகித்தது. பூமியில் இருந்த மற்றொரு கால் பூலோகமாகிய வீட்டின் நடுவீட்டுத் தூண் போல் இருந்ததே!

(13)

आक्रामद्भ्यां त्रिलोकीमसुरसुरपती तत्क्षणादेव नीतौ
याभ्यां वैरोचनीन्द्रौ युगपदपि विपत्संपदोरेकधाम।
ताभ्यां ताम्रोदराभ्यां मुहुरहमजितस्याञ्चिताभ्यामुभाभ्यां
प्राज्यैश्वर्यप्रदाभ्यां प्रणतिमुपगतः पादपङ्केरुहाभ्याम् ॥

ஆக்ராமத்ப்யாம் த்ரிலோகீ மஸுரஸுரபதீ
தத்க்ஷணாதேவ நீதௌ
யாப்யாம் வைரோசநீந்த்ரௌ யுகபதபி
விபத்ஸம்பதோரேகதாம
தாப்யாம் தாம்ரோதராப்யாம் முஹுரஹமஜிதஸ்
யாஞ்சிதாப்யாமுபாப்யாம்
ப்ராஜ்யை ச்வர்ய ப்ரதாப்யாம் ப்ரணதிமுபகத:
பாதபங்கேருஹாப்யாம் ॥

மூவுலகையும் ஆக்ரமித்த திருவடித்தாமரைகளால் அசுரத் தலைவரான வைரோசனியும் சுரபதியான இந்திரனும் ஒரே சமயத்தில் விபத்துக்களையும், ஸம்பத்துக்களையும் முறையே அடைவிக்கப்பட்டனர். திரிவிக்ரம மஹாவிஷ்ணுவின் அந்த திருவடிகள், சிவந்த தலத்தையுடையனவாயும், அளவற்ற ஐச்வரியம் நல்குபவையாயும் மிளிர்கின்றன. அவற்றிற்கு நமஸ்காரம் செய்கிறேன்.

(14)

येभ्यो वर्णश्चतुर्थश्चरमत उदभूदादिसर्गे प्रजानां
साहस्री चापि संख्या प्रकटमभिहिता सर्ववेदेषु येषाम्।
व्याप्ता विश्वंभरा यैरतिविततनोर्विश्वमूर्तेर्विराजो
विष्णोस्तेभ्यो महद्भ्यः सततमपि नमोऽस्त्वङ्घ्रिपङ्केरुहेभ्यः ॥

யேப்யோ வர்ண ஸ்சதுர்த: சரமத உதபூத்
ஆதிஸர்கேப்ரஜாநாம்

ஸாஹஸ்ரீசாபிஸங்க்யா ப்ரகடமபிஹிதா
ஸர்வவேதேஷுயேஷாம்

வ்யாப்தா விச்வம்பரா யை ரதிவிததநோ:
விச்வமூர்தேர்விரோஜோ

விஷ்ணோ ஸ்தேப்யோ மஹத்ப்ய: ஸததமபி
நமோऽஸ்வத்வங்க்ரி பங்கேருஹேப்ய: ॥

ப்ரஜைகளை முதலில் சிருஷ்டிக்கத் தொடங்கிய பொழுது நான்காவது வர்ணம் விஷ்ணுவின் எந்த திருவடிகளிலிருந்து தோன்றியதோ, எவை கணக்கில் ஆயிரம் என்று எல்லா வேதங்களிலும் தெளிவாகக் கூறப்பட்டதோ, விராட் புருஷனான விஷ்ணுவின் எந்த திருவடிகளால் பூலோகம் முழுதும் வியாபிக்கப் பட்டுள்ளதோ, அந்த திருவடிகளுக்கு நமஸ்காரம்.

(15)

विष्णोः पादद्वयाग्रे विमलनखमणिभ्राजिता राजते या
राजीवस्येव रम्या हिमजलकणिकालङ्कृताग्रा दलाली ।
अस्माकं विस्मयार्हाण्यखिलजनमनःप्रार्थनीया हि सेयं
दद्यादाद्यानवद्या ततिरतिरुचिरा मङ्गलान्यङ्गुलीनाम् ॥

விஷ்ணோ: பாதத்வயாக்ரே விமலநகமணி
ப்ராஜிதா ராஜதேயா

ராஜீவஸ்யேவ ரம்யா ஹிமஜலகணிகா
லங்க்ருதாக்ரா தலாலீ

அஸ்மாகம் விஸ்மயார்ஹாண்யகில ஜனமந:
ப்ரார்த்தநீயா ஹி ஸேயம்

தத்யா தாத்யா நவத்யா ததிரதிருசிரா
மங்கலான்யங்குலீநாம் ॥

விஷ்ணுவின் இரண்டு கால் நுனிகளிலும் தூய நகங்களுடன், பனித்துளியுடன் கூடிய தாமரையிதழ் போன்று விளங்கும் விரல் கூட்டம் நமக்கு வியக்கத் தரும்படி மங்களங்களை வழங்கட்டும்.

(16)

यस्यां दृष्ट्वामलायां प्रतिकृतिममराः स्सं भवन्त्यानमन्तः
सेन्द्राः सान्द्रीकृतेर्ष्यास्त्वपरसुरकुलाशङ्कयातङ्कवन्तः ।
सा सद्यः सातिरेकां सकलसुखकरीं संपदं साधयेन्न -
श्चञ्चच्चार्वंशुचक्रा चरणनलिनयोश्चक्रपाणेर्नखाली ॥

யஸ்யாம் த்ருஷ்ட்வாமலாயாம் ப்ரதிக்ருதி மமரா:
ஸம்பவந்த்யா நமந்த:
ஸேந்த்ரா: ஸாந்த்ரீக்ருதேர்ஷ்யாஸ்த்வபரஸுர
குலாசங்கயா தங்கவந்த: ।
ஸா ஸத்ய: ஸாதிரேகாம் ஸகல ஸுககரீம் ஸம்பதம்
ஸாதயேந்ந:
சஞ்சச்சார்வம் சுசக்ரா சரண நலிநயோ:
சக்ரபாணேர் நகாலீ॥

இந்திரன் முதலிய தேவர்கள் நமஸ்கரிக்கும்போது விஷ்ணுவின் நகங்களில் தங்களது உருவத்தைப் பார்த்து வேறு தேவர்களின் உருவமோ என சங்கித்து கவலை கொண்டவர்களாய் ஆகி விடுகிறார்கள். அப்படிப்பட்ட பளபளக்கும் காந்தி கிரணங்களையுடைய சக்ரபாணியின் நகஸமூகம் எங்களுக்கு செல்வத்தை சேர்ப்பதாக!

(17)

पादाम्भोजन्मसेवासमवनतसुरव्रातभास्वत्किरीट-
प्रत्युप्तोच्चावचाश्मप्रवरकरगणैश्चित्रितं यद्विभाति ।
नम्राङ्गानां हरेर्नो हरिदुपलमहाकूर्मसौन्दर्यहारि-
च्छायं श्रेयः प्रदायि प्रपदयुगमिदं प्रापयेत्पापमन्तम् ॥

பாதாம்போஜன்ம ஸேவாஸமவநத ஸுரவ்ராத
பாஸ்வத்கிரீட

ப்ரத்யுப்தோச்சாவசாச்மப்ரவர கரகணை:
சித்ரிதம்யத்விபாதி।

நம்ராங்காநாம் ஹரேர்நோ ஹரிதுபல மஹா கூர்ம
ஸௌந்தர்ய ஹாரி

ச்சாயம் ச்ரேய:ப்ரதாயி ப்ரபதயுகமிதம்
ப்ராபயேத் பாப மந்தம்॥

ஹரியின் புறங்கால்களிரண்டும் வணங்கியவர்களின் பாபத்தை நீக்கட்டும், அவை இயல்பாகவே ச்ரேயஸை கொடுப்பன. பச்சைக்கற்களால் அமைக்கப்பட பெரும் ஆமை வடிவழகு கொண்டவை. காலில் விழுந்து வணங்கும் தேவர்களின் கிரீடத்திலுள்ள வைரக் கற்களின் நிறம் நிழல் படிந்து மிக அழகாகத் தோற்றமளிக்கின்றன இவை.

(18)

श्रीमत्यौ चारुवृत्ते करपरिमिलनानन्दहृष्टे रमायाः
सौन्दर्याढ्येन्द्रनीलोपलरचितमहादण्डयोः कान्तिचौरे ।
सूरीन्द्रैः स्तूयमाने सुरकुलसुखदे सूदितारातिसङ्घे
जङ्घे नारायणीये मुहुरपि जयतामस्मदंहो हरन्त्यौ ॥

ஸ்ரீமத்யௌ சாருவ்ருத்தே கரபரிமிலனானந்த
ஹ்ருஷ்டே ரமாயா:

ஸௌந்தர்யாட் யேந்த்ர நீலோபல
ரசிதமஹாதண்டயோ: காந்திசௌரே।

ஸூரீந்த்ரை: ஸ்தூயமாநேஸுர குலஸுகதே
ஸூதிதாராதிஸங்கே

ஜங்கே நாராயணீயே முஹுரபி ஜயதா
மஸ்மதம்ஹோ ஹரந்த்யௌ॥

பகைவரை அழித்து தேவர்க்கு ஸுகமளித்து காக்கும் நாராயணனது முழங்கால்கள் எங்கள் பாபத்தைப் போக்கி விளங்கட்டும். சான்றோர் போற்றுமளவு உருண்டு திரண்டவை; லக்ஷ்மீதேவியின் கை வருடல் காரணமாக ஸுகம் நேடியவை. நேர்த்தியான இந்த்ர நீலக்கல்லால் சமைத்த தண்டங்களின் அழகையும் கொண்டவை.

**(19)**

सम्यक् साह्यं विधातुं सममिव सततं जङ्घयोः खिन्नयोर्ये
भारीभूतोरुदण्डद्वयभरणकृतोत्तम्भभावं भजेते ।
चित्तादर्शं निधातुं महितमिव सतां ते समुद्गायमाने
वृत्ताकारे विधत्तां हृदि मुदमजितस्यानिशं जानुनी नः ॥

ஸம்யக்ஸாஹ்யம் விதாதும் ஸமமிவஸததம் ஜங்கயோ:
கிந்நயோர்யே
பாரீபூதோரு தண்டத்வய பரணக்ருதோத்தம்ப
பாவம் பஜேதே।
சித்தாதர்சம் நிதாதும் மஹிதமிவ ஸதாம் தே ஸமுத்
காயமாநே
வ்ருத்தாகாரே விதத்தாம் ஹ்ருதி முத மஜித
ஸ்யாநிசம் ஜானுநீந:

சோர்ந்து போன முழங்கால்களுக்கு சற்று நல்ல உதவி செய்ய எண்ணியும், பாரமாக இருக்கும் தொடைகளைத் தாங்க வேண்டியும் சற்று முன் தள்ளி அமைந்தவையும், நல்லோரின் தூய மனக்கண்ணாடியை வைக்கும் பேழை போன்றிருப் பவையும் உருண்டு இருப்பவையுமான விஷ்ணுவின் முட்டிக் கால்கள் எமக்கு மகிழ்ச்சி பொங்கச் செய்யட்டும்.

(20)

देवो भीतिं विधातुः सपदि विदधतौ कैटभाख्यं मधुं चा–
प्यारोप्यारूढगर्वावधिजलधि ययोरादिदैत्यौ जघान।
वृत्तावन्योन्यतुल्यौ चतुरमुपचयं बिभ्रतावभ्रनीला –
वूरू चारू हरेस्तौ मुदमतिशयिनीं मानसे नो विधत्ताम्॥

தேவோ பீதிம் விதாது: ஸபதிவிதததௌ கைடபாக்யம்
மதும்சா
ப்யாரோப்யாரூடகர்வாவதி ஜலதி யயோராதி
தைத்யௌ ஜகாந।
வ்ருத்தாவன்யோன்ய துல்யௌ சதுரமுபசயம்
பிப்ரதாவப்ரநீலௌ
ஊரூசாரூ ஹரேஸ்தௌ முதமதிசயிநீம் மானஸே
நோ விதத்தாம்॥

ஹரி, முன்பு பிரம்மதேவனுக்கு பயம் காட்டிய மதுகைடபாஸுர்களை தன் தொடையின் மீது ஏற்றி சமுத்ரத்தில் வதைத்தார். அந்த தொடைகள் ஒன்றுக்கொன்று இணையானவை. அழகியவை, பெருத்து உருண்டுமிருப்பவை. அவை எமக்கு பெருவான மகிழ்ச்சியை தந்தருளட்டும்.

(21)

पीतेन द्योतते यच्चतुरपरिहितेनाम्बरेणात्युदारं
जातालङ्कारयोगं चलमिव जलधेर्वाडवाग्निप्रभाभिः।
एतत्पातित्यदाम्नो जघनमतिघनादेनसो माननीयं
सातत्येनैव चेतोविषयमवतरत्पातु पीताम्बरस्य॥

பீதேந த்யோததே யத் சதுரபரிஹிதே நாம்பரேணாத்
யுதாரம்
ஜாதாலங்காரயோகம் சலமிவ ஜலதேர்வாட
வாக்னி ப்ரபாபி:।
ஏதத் பாதித்ய தாந்நோ ஜகந மதிக நாதேனஸோ
மானனீயம்
ஸாதத்யேநைவ சேதோவிஷய மவதரத்பாது
பீதாம்பரஸ்ய॥

பீதாம்பரனான விஷ்ணுவினுடைய போற்றத்தக்கதும் அடிக்கடி மனதிற்கொள்ளப்படுவதுமான குஹ்யப்ரதேசம் எங்க்ளை பெரும்பாபத்தினின்று காத்தருளட்டும். அந்த ஜகன பரதேசம் அழகாக அணியப்பட்ட மஞ்சள் பட்டினால் மிக நேர்த்தியாக உள்ளது. பாடவத்தியின் ஒளிகளால் சமுத்ர ஜலம் போன்று ஒப்பனை கொண்டதாயுமிருக்கிறது.

(22)

यस्या दाम्ना त्रिधाम्नो जघनकलितया भ्राजतेऽङ्गं यथाब्धे
र्मध्यस्थो मन्दराद्रिर्भुजगपतिमहाभोगसंनद्धमध्यः ।
काञ्ची सा काञ्चनाभा मणिवरकिरणैरुल्लसद्भिः प्रदीप्ता
कल्यां कल्याणदात्री मम मतिमनिशं कम्ररूपा करोतु ॥

யஸ்யா தாம்நா த்ரிதாம்நோ ஜகநகலிதயா
ப்ராஜதேऽங்கம்யதா ப்தே:
மத்யஸ்தோ மந்தராத்ரி: புஜகபதி
மஹாபோக ஸந்நத்த மத்ய:।
காஞ்சீஸா காஞ்சநாபா மணிவரகிரணை
ருல்லஸத்பி: ப்ரதீப்தா
கல்யாம் கல்யாண தாத்ரீ மம
மதிமநிசம் கம்ரரூபா கரோது ॥

ஸ்ரீமந் நாராயணனுடைய இடுப்பில் அணியப்பட்ட எந்த ஒட்டியாணப் பட்டையால், கடல் நடுவில் இருப்பதும், வாஸுகியின் நீண்ட உடல் சுற்றிய நடு பாகத்தையுடையதுமான மந்தர மலைபோல் அவரது உடல் விளங்கிறதோ, தங்கமயமானதும், பல நல்ல வைரங்கள் பதித்து அழகிய தோற்றமுடையதுமான அந்த ஒட்டியாணம் என் புத்தியை யோக்யமானதாகச் செய்யட்டும்.

(23)

उन्नम्रं कम्रमुच्चैरुपचितमुदभूद्यत्र पत्रैर्विचित्रैः
पूर्वं गीर्वाणपूज्यं कमलजमधुपस्यास्पदं तत्पयोजम् ।
तस्मिन्नीलाश्मनीलैस्तरलरुचिजलैः पूरिते केलिबुद्ध्या
नालीकाक्षस्य नाभीसरसि वसतु नश्चित्तहंसश्चिराय ॥

உந்நம்ரம் கம்ரமுச்சை ருபசிதமுத பூத் யத்ர
பத்ரைர் விசித்ரை:

பூர்வம் கீர்வாண பூஜ்யம் கமலஜமது பஸ்யாஸ்
பதம் தத் பயோஜம் ।

யஸ்மிந் நீலாச்ம நீல ஸ்தரலருசிஜலை:
பூரிதே கேலி புத்யா

நாலீகாக்ஷஸ்ய நாபீஸரஸி வஸது
நஸ்சித்தஹம்ஸ:சிராய ॥

தாமரைக் கண்ணனான நாராயணரின் நாபியாகிய வாவியில் நீலமணி போல் நீலமான சலசலக்கும் தண்ணீர் நிரம்பி வழிகிறது. அந்த தாடகத்தில் எங்கள் மனமாகிய அன்னப்பறவை விளையாடும் எண்ணத்தில் வெகுநாட்கள் தங்கலாமே! அந்த நாபியில் தானே நெடிதுயர்ந்த அழகிய ஒரு தாமரை விசித்ரமான இலையுடன் பிரம்மதேவனுக்கு இருப்பிடமாக வளர்ந்தது!

(24)

पातालं यस्य नालं वलयमपि दिशां पत्रपङ्क्तिं नगेन्द्रान्
विद्वांसः केसरालीर्विदुरिह विपुलां कर्णिकां स्वर्णशैलम् ।
भूयाद्गायत्स्वयंभूमधुकरभवनं भूमयं कामदं नो
नालीकं नाभिपद्माकरभवमुरु तन्नागशय्यस्य शौरेः ॥

பாதாலம் யஸ்யநாலம் வலயமபி திசாம்
பத்ரபங்க்திம் நதேகந்த்ரான்

வித்வாம்ஸ: கேஸராலீ: விதுரிஹ விபுலாம்
கர்ணிகாம் ஸ்வர்ணசைலம்।

பூயாத்காயத் ஸ்வயம்பூ மதுகரபவனம்
பூமயம் காமதம்நோ

நாலீகம் நாபிபத்மாகரபவமுரு
தந்நாக சய்யஸ்ய செளரே:॥

ஆதிசேஷனாகிய படுக்கையுடைய செளரியின் நாபி தடாகத்தில் அமைந்த, ரீங்கார கானம் செய்யும் பிரம்மனாகிய வண்டின் தாமரை வீடு எங்கள் விருப்பங்களை அருளுவதாகட்டும். அந்த கட்டிடத்தின் அடித்தலம் பாதாலமென்றும், இதழ் வரிசைகள் திசைகளின் வட்டம் என்றும், கேஸரங்கள் மலைகள் என்றும், கர்ணிகை மேருமலை என்றும் அறிந்தவர் கூறுவர்.

(25)

आदौ कल्पस्य यस्मात्प्रभवति विततं विश्वमेतद्विकल्पैः
कल्पान्ते यस्य चान्तः प्रविशति सकलं स्थावरं जङ्गमं च ।
अत्यन्ताचिन्त्यमूर्तेश्चिरतरमजितस्यान्तरिक्षस्वरूपे
तस्मिन्नस्माकमन्तःकरणमतिमुदा क्रीडतात्क्रोडभागे ॥

ஆதெள கல்பஸ்ய யஸ்மாத் ப்ரபவதி விததம்
விச்வமேதத் விகல்பை:
கல்பாந்தே யஸ்ய சாந்த: ப்ரவிசதி ஸகலம்
ஸ்தாவரம் ஜங்கமம்ச।
அத்யந்தாசிந்த்யமூர்தே: சிரதர
மஜித ஸ்யாந்தரிக்ஷ ஸ்வரூபே
தஸ்மின் அஸ்மாகமந்த: கரண
மதிமுதா க்ரீடதாத் க்ரோடபாகே।

யுக ஆரம்பத்தில் இந்த உலகம், பல பல வேறுபாடுகளோடு எந்த ஒரு அம்சத்திலிருந்து உண்டாகிறதோ, அதேபோல் யுகமுடிவில் எங்கு அனைத்து ஸ்தாவர ஜங்கமங்களும் ஒடுங்குகின்றனவோ அதே அந்த அந்தரிக்ஷ ரூபமான பரமனின் அம்சத்தில் நமது அந்த:கரணம் மகிழ்ச்சியுடன் விளையாடட்டும்.